# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம்
நெல்வளமே நாட்டின்வளம்

சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்
(திருவிளையாடற்புராணம்
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 3 விளைச்சல் : 21 திருவள்ளுவர் ஆண்டு 2053 பிப்பிரவரித் திங்கள் 2022


## உள்ளே...















# விளையாட்டுக் கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| Acrobranching | – | கிளைத்தாவி ஆட்டம் |
| Arm wrestling | – | கைவலுப் போட்டி |
| Blue whale | – | கொலைவெறி ஆட்டம் |
| Camp fire | – | சுடரொளிக் களியாட்டம் |
| Cat walk | – | ஒயில் நடை |
| Chi walking | – | தகு நடை |
| Coasteering | – | வீர விளையாட்டு / துணிவு ஆட்டம் |
| Duck Out area | – | ஆட்டக்காரர் அமருமிடம் |
| Edutainment | – | விளையாட்டுவழிக் கல்வி |
| E-sports | – | மின்–ஆட்டம் |
| Flipism | – | பூவா தலையா |
| Funkinetics | – | இசைசேர் உடற்பயிற்சி |
| Hot tric | – | தொடர் மும்முறை |
| Innings | – | முறையாட்டம் |
| Interactive site | – | ஊடாடும் தளம் |
| Jog | – | துள்ளோட்டம் |
| Joy walking | – | களி நடை |
| Loosening walk | – | தளர்நடை |
| Marathon | – | நெட்டோட்டம் |
| Play of round | – | மறுவாய்ப்பு |
| Scam hit games | – | ஊழல் விளையட்டு |
| Track-suit | – | தடகள ஆடை |
| Walking mediation | – | தவ நடை |
| Table tennis | – | மிசைப் பந்தாட்டம் |

**சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2053 – தை
பிப்பிரவரித் திங்கள் 2022

ஆசிரியர் : முனைவர் **கோ.விசயராகவன்**
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே.கார்த்திக்

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திரு. ப. தீபக்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர், சென்னை - 600 028.
கட்டணமில்லா அழைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

# மொழி ஆய்ந்த தொல்காப்பியம்

உலகிலுள்ள ஒவ்வொரு மொழியும் ஒரு சிறப்பான தன்மையைப் பெற்றிருக்கும். அச்சிறப்பு மக்கள் அவர்கள் வாழும் சூழலுக்கு ஏற்ப அமைந்திருக்கும். இந்நிலை தமிழுக்கு இருந்தாலும் மற்ற மொழி பேசுவோர் சிந்தித்ததைவிட பழந்தமிழர் மேலும் அதிகமாகச் சிந்தித்துள்ளார்கள். இதனாலேயே மற்றைய மொழிகளுக்கு இல்லாத பெருமை தமிழுக்கு இருக்கின்றது. அதனால் தான் உயர்தனிச் செம்மொழி என அறிஞர் பெருமக்கள் போற்றுகின்றனர். தமிழுக்கு அப்பெருமை வரக் காரணம் மொழிக்கு மட்டுமன்று வாழ்வியலுக்கும் இலக்கணம் கூறிய தொல்காப்பியம் ஆகும்.

மொழிக்கு இலக்கணம் வகுத்தது போன்று மண்ணுக்கும், வாழ்ந்த மக்களுக்கும் இலக்கணம் வகுத்த இனம் நம் தமிழினம். தொல்காப்பியம் தமிழ் மொழியை அறிவியல் கோணத்தில் அலசிப் பார்க்கும் ஓர் இலக்கண நூல். இலக்கணத்தை இக்காலத்தில் மொழியியல் என்று கூறுகிறோம். தொல்காப்பியம் எழுத்து, தனித்தும் சேர்ந்தும் சொல்லப்படும்போது ஒன்றைச் சுட்டும் சொல், சொற்கள் தொடர்ந்து நின்று வாழ்வியலை உணர்த்தும் பொருள் என மூன்று நிலைகளில் வகைப்படுத்துகின்றது. தொல்காப்பியம் தமிழர்களின் உயிர் நூல் எனக் கூறுவார் மூதறிஞர் வ.சுப. மாணிக்கனார். தொல்காப்பியரைப் 'புலம் தொகுத்தோன்' என்று தொல்காப்பியத்துக்குப் பாயிரம் தந்த பனம்பாரனார் குறிப்பிடுகிறார். புலம் எனும் சொல் இலக்கணத்தைக் குறிக்கும்.

இலக்கணம் எனும் சொல் தூய தமிழ்ச் சொல்லாகும். தொல்காப்பியம் 1610 நூற்பாக்களால் ஆனது. எழுத்து, சொல், பொருள் என மூன்று அதிகாரங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. முதலாவது எழுத்ததிகாரம் தனிமொழியிலும் புணர்மொழியிலும் உள்ள எழுத்துகளைக் கூறுகிறது. இரண்டாவது சொல்லதிகாரம் மொழித்தொடர் அமையும் பாங்கைச் சொல்கிறது. மூன்றாவது பொருளதிகாரம் வாழ்க்கைப் பொருளையும் அப்பொருள் சொல்லப்பட்டுள்ள யாப்பு, அணி முதலான பாங்குகளையும் தமிழ் மரபையும் விளக்குகிறது. இயம்புவது இயம். இயத்துக்குக் காப்புத் தருவது காப்பியம். தொன்மையான காப்பியம் தொல்காப்பியம் ஆனது. தொல்காப்பியத்தின் ஆசிரியரான தொல்காப்பியர் பற்றிய வரலாறு சரிவர அறியப்படாத பெரும்புலவர்களின் வரலாறு போன்றே உள்ளது.

தொல்காப்பியர் காலத்துக்கும் முந்தைய கால இலக்கண நூலாசிரியர்கள் இலக்கணம் யாத்தமையை என்ப, என்மனார் புலவர், யாப்பறி புலவர், தொன்மொழிப் புலவர், குறியறிந்தோர் உள்ளிட்ட சொற்கள் சுட்டுவதைக் கண்டு நாம் தெளியலாம். தமிழ் ஒலிகள் பிறக்கும் பொது இயல்பையும் தனித்தனி எழுத்துகளின் பிறப்பு முறையையும் இன்றைய ஒலியியலாளரும் வியக்கும் வண்ணம் விளக்கியுள்ளார் தொல்காப்பியர். ஒலிவடிவம் மட்டுமல்லாது வரிவடிவத்தையும் எகரமும், ஒகரமும், குற்றியலுகரமும் புள்ளிபெறும் என்கிறார். சொற்கள் நிலைமொழியாகவும் வருமொழியாகவும் நின்று புணரும் நிலைகளை எழுத்ததிகாரம் சொல்கிறது. புணர்ச்சியை வேற்றுமைப்புணர்ச்சி என்றும் வேற்றுமை அல்லாத புணர்ச்சி என்றும், இயல்பு புணர்ச்சியென்றும் விகாரப் புணர்ச்சி என்றும் பாகுபாடு செய்து விளக்குகின்றார். மேலும், பண்டு தமிழ்நாட்டில் வழங்கிய இசை இலக்கணத்தைக் குறிக்கும் தொல்காப்பியர் நரம்பின் மறை என்று கூறுகிறார். மாதங்களின் பெயர்களை இகர ஈற்றிலும், ஐகார ஈற்றிலும் மட்டுமே பேசுகின்றார்.

தமிழ்த் தொடர்களின் இலக்கணம் சொல்லதிகாரத்தில் சிறப்பாக விளக்கப்பட்டுள்ளது. தொடர்களின் ஆக்கம், தொடரில் சொற்கள் நிற்கும் நிலை ஆகியன சிறப்புப் பெற்றுள்ளன. "வடசொல் கிளவி வடவெழுத்து ஒரீஇ எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே" (66) என்பதன் மூலம் தொல்காப்பியர் பிறமொழிக்குரிய ஒலிகளைக் கடன் வாங்குவது தகாது என்ற சிறந்த கருத்தைக் கூறுகிறார். வரம்பின்றி வடமொழி ஒலிகளைக் கடன் பெற்ற ஏனைய திராவிட மொழிகளிலிருந்து தமிழ்மொழி வேறுபட்டதை இங்குச் சுட்டுகின்றார்.

பொருளிலக்கணம் அகம், புறம் என இரண்டாக அமைந்து தமிழுக்கே சிறப்புச் செய்கிறது. இலக்கியங்களை உருவாக்கும் படைப்பாளன் பின்பற்ற வேண்டிய நெறிமுறைகளை வகுத்துக் கூறுகின்றது. இது தமிழரின் கவிதை இயலாகும். பொருளதிகாரம் எழுதப்படும் நூலில் உள்ள வாழ்க்கைப் பொருளையும், அப்பொருள் சொல்லப்பட்டுள்ள யாப்பு, அணி முதலான பாங்குகளையும் தமிழ் மரபையும் விளக்குகிறது.

தொல்காப்பியர் தொடரியலுக்கு எனத் தனியே அதிகாரம் வகுக்கவில்லை. எனினும், சொல்லதிகாரத்திலேயே தொடரியல் இலக்கணத்தைக் கூறியுள்ளமை அறியத்தக்கது. ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகத் தமிழ்த் தொடர்களின் இயைபு கெடாமல் நீடித்து வருவதற்குத் தொல்காப்பிய இலக்கணமே காரணமாக அமைகிறது. நெகிழ்ச்சியான தொடர் அமைப்புக் காரணமாக, சொல் வரிசையில் மாற்றம் செய்தாலும் பொருள் மாறாதிருக்கும் தமிழ்மொழியின் சிறப்பை என்னென்பது!. தமிழ் வினைச்சொற்கள் பல இலக்கணக் கூறுகளை உணர்த்தி நிற்கின்றன. மொழியின் அமைப்பை முறையாகப் புரிந்துகொள்ள

காலந்தோறும் அதில் ஏற்பட்டுள்ள வளர்ச்சி மாற்றங்களைக் கூர்ந்து கவனிப்பது இன்றியமையாதது ஆகும். ஒலிகளின் ஒலிப்பு முறை குறித்த ஆய்வை மிகப் பழங்காலத்திலேயே தொல்காப்பியர் நிகழ்த்தியிருக்கும் பாங்கும், சிறப்பும் இக்கால மொழியியல் ஆய்வு உண்மைகளோடு பொருத்திப் பார்க்கும்போது வியக்கும் வண்ணம் உள்ளது.

இப்படி இலக்கணத்துக்குள் வாழ்வியலைச் சொல்லி, முந்துமொழியாம் தமிழை ஆய்ந்துள்ளது தொல்காப்பியம். தமிழில் கிடைத்துள்ள மிகத் தொன்மையான இலக்கண நூலான தொல்காப்பியத்தில் தமிழ் அகராதிக்கான தொடக்கப்புள்ளி அமைந்துள்ளது. இதிலிருந்து செவ்விய சொற்கட்டமைப்பைக் கொண்ட தமிழ்மொழியின் தொன்மையையும், தமிழ் அகராதியியலின் தொடக்கத்தையும், மொழியின் காவலுக்கு அகராதிகள் உருவாக்கப்பட வேண்டியதன் தேவையையும் நாம் ஒருங்கே உய்த்தறியமுடியும்.

1974ஆம் ஆண்டிலிருந்து தமிழ் அகராதி உருவாக்கப் பணியைச் செய்துவரும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் இப்பொழுதும் மொழிக்காப்புக்கான ஆக்கப் பணிகளைத் தமிழ்நாடு அரசின் நெறிப்படுத்தலோடு முன்னெடுத்துச் செயற்படுத்தி வருகிறது. இப்பணிகளுக்குத் துணைநிற்கும் அகராதியியலாளர்கள், சொல்லாக்க வல்லுநர்கள், மொழியியலாளர்கள், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், மாணவர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் இவ்வியக்ககத்தின் சார்பில் நன்றி நவில்கிறேன்.

தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் மேனாள் துணைவேந்தரும் நாடறிந்த நற்றமிழறிஞருமான முனைவர் ஔவை நடராசன் ஐயா அவர்களின் “அகராதிக்கலை நாளும் வளர்க" என்னும் பொருண்மையிலான கட்டுரையும், அறிஞர் தேவராசன் ஐயா அவர்களின் “TAMILS IN ANCIENT SRI LANKA : SOME EPIGRAPHIC EVIDENCE" என்னும் கட்டுரையும் இம்மாதச் “சொல்வயல்" இதழுக்கு அணிசேர்த்திருக்கின்றன. அப்பெருந்தகைகளுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

“மொழி ஞாயிறு“ தேவநேயப் பாவாணரின் சொல்லாராய்ச்சியில் மேல்நாட்டுக்கோட்பாடுகள் எனும் பொருண்மையிலான கட்டுரையை வழங்கிய பிரான்சு நாட்டைச் சேர்ந்த அகராதியியல் அறிஞர் முனைவர் ச.சச்சிதானந்தம் ஐயா அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

இவ்வியக்ககம் நெறிப்படுத்தும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்குகளில் பங்கேற்றுத் தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றிய பலதுறை சார்ந்த அனைத்துத் தமிழுள்ளங்களுக்கும் அகம்நிறை அன்பு நன்றியை உரித்தாக்குகிறேன்.

தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒருங்கிணைந்த உள்ளத்தினராய் என்றென்றும் ஒருங்கிணைந்து செயலாற்றுவோம்.

செயலால் பேசுவோம்...

## கார்த்திகை ... மார்கழி

முகில் அடர்ந்துள்ள திசைக்குக்
"கார்த்திகை"
என்று பெயர்.
அத்திங்களில் நாட்டைச் சூழ்ந்த திசையெங்கும்
கார் செறிந்து உலவும்.
மழை பின்னியெடுக்கும்
(கார்=புனல், நீர்
கார்=மழை)

வைகறை கார்பெற்ற புலமே போல்(கலி.36)

கார்த்திகையை அடுத்த மாரிகழி , மாரிகழி மாதம் என்றனர்.
நாம் கொஞ்சம் குறுக்கி அழகாக
மார்கழி என்கிறோம்.

ப.அருளி
(சொல்லாய்வுச்செம்மல்)
சான்று:
காரணம்
வேரியல் ஆராய்ச்சித் திங்கள் இதழ்

# அகராதிக்கலை நாளும் வளர்க!

## முனைவர் ஔவை நடராசன்
மேனாள்துணைவேந்தர், தமிழ்ப் பல்கலைக்கழகம்,தஞ்சாவூர்.



தமிழ்மொழியில் கவிதை, கட்டுரை, சிறுகதை, நாடகம், இதழியல், அறிவியல் என்று இன்று பலவாறாகப் பெருகியுள்ளன. அந்தவகையில் இலக்கியங்களில் அகராதிக்கலை என்பது இப்போது மகத்தான வளர்ச்சி பெற்றிருக்கிறது.

மதிப்பிற்குரிய ஆங்கிலப் பேராசிரியர் உலகப்புகழ் பெற்ற கே. சுவாமிநாதன் தில்லிக்குப் பிரதமர் நேருவால் அழைக்கப்பெற்றுக் காந்திய நூல்களை 100 தொகுதிகளாகத் தொகுத்த பெருமிதமானவர். அவர், அடிக்கடி ஒரு பொன்மொழி சொல்வாராம், 'A good student reads a book always with a dictionary.'

வெள்ளிநாப்புலவர் என்று உலகம் பாராட்டிய சீனிவாச சாஸ்திரியார் தன் கையில் எப்போதும் ஆக்சுபோர்டு அகராதியை வைத்துக்கொண்டிருந்தாராம்.

தமிழகராதிகள் பெருகுவது இன்றியமையாததாகும்

தமிழில் அகராதிகள் முற்காலத்தில் பல தோன்றின. அவற்றுள் மறைந்தவை சில; இருப்பவை சில; எதையுமே செய்யுள் வடிவத்தில் எழுதும் வழக்கம் இருந்த காலத்தில், அகராதிகளும் அவ்வடிவத்தில் தோன்றி வளர்ந்தன; நிகண்டுகள் எனப் பெயர் பெற்று இருந்தன. அக்காலத்து மாணவர்கள் மனப்பாடம் செய்து நினைவில் வைத்துப் பயன்படுத்துதற்கு உரிய வகையில் அமைந்தன.

ஒரு கலையாக வளர்ச்சி பெற்ற தமிழகராதித்துறை 3000 ஆண்டுகட்கு முன்பே தமிழில் தோற்றம் எடுத்தது என்று அறிஞர்கள் கூறுவர். இப்பொழுது கிடைத்திருக்கும் தமிழ் நூல்களுள் முற்பட்டதாகவும், 3000 ஆண்டுக்கு முன்பு தோன்றியதாகவும் கருதப்படும் தொல்காப்பியம் என்னும் பெரிய இலக்கண நூலில் சொற்களுக்குப் பொருள் கூறும் பகுதிகள் உள்ளன.

தொல்காப்பியத்தில் சொல்லதிகாரத்திலுள்ள 'உரியியல்' என்னும் பிரிவில் 120 சொற்கட்குப் பொருள் கூறியுள்ளார் ஆசிரியர் தொல்காப்பியர் என்று பலர் எடுத்துக் காட்டியுள்ளனர். அதே அதிகாரத்திலுள்ள 'இடையியல்' என்னும் பகுதியிலும் சொற்கட்கு உரிய பொருள்கள் தரப்பட்டுள்ளன. பொருளதிகாரத்திலுள்ள 'மரபியல்' எனும் பகுதியிலும் சொற்பொருள் அறிவிக்கும் பகுதி அமைந்துள்ளது. இம்மூன்று இயல்களுக்குள்ளேயே உரியியலில் தான் முழு அளவில் அகராதிக்கூறு அமைந்துள்ளது. எனவே, இதனை முதல் தமிழ் அகராதி என்று கூறலாம் என்று பேராசிரியர் சுந்தரச் சண்முகனார் குறிப்பிட்டுள்ளார்.

அகராதிகள் சொற்களையும் அவற்றின் வழியே மக்களினத்தின் தொல்மரபு, பழக்க வழக்கம், பண்பாடு, அரசியல், வாணிகம் உள்ளிட்ட வரலாறுகளையும் பாதுகாத்து, வரும் தலைமுறையினருக்குக் கொண்டுசெல்லும் சொற் கருவூலங்களாகும். மொழியைக் காக்கவும், மொழிப்புலமையை வளர்த்தெடுக்கவும் துணைசெய்யும் அகராதிகளை உருவாக்குவதென்பது நுட்பமான பணியாகும். சொற்கள் காலந்தோறும் மாற்றத்திற்குட்படுபவை என்பதனால், மொழி உள்ளளவும் அகராதிப்பணி என்பது இடையறாமல் தொடருகிற அறிவுப் பணியாகும்.

சொற்களே மொழியின் வளம் காட்டும் அளவுகோல் ஆகும்

சொற்களின் வளம் வளர்ந்தால் மொழியின் நலம் மிளிரும். ஒரு மொழி வாழும் மொழியாக நிலைக்க வேண்டுமென்றால் அம்மொழியின் சொற்கள் தொடர்ந்து பாதுகாக்கப்பட்டுப் புழக்கத்தில் இருத்தல் வேண்டும். சொற்கள் பாதுகாக்கப்படவில்லையென்றால் நாளடைவில் நினைவில் அகன்று வழக்கொழிந்துவிடும். அதன்பின்னர், மொழியின் சொல்வளம் குன்றிப் பிறமொழிச் சொற்களின் தாக்கம் அதிகமாகிவிடும். இந்நிலை ஏற்படாமல் இருக்க ஒவ்வொரு மொழியிலும் அம்மொழிச் சொற்களைப் பாதுகாக்க வேண்டியது பெருங் கடமையாகிறது.

அவ்வகையில், தொன்மைமிகு தமிழ்மொழியின் சொல்வளங்களை அகராதிகளில் பதிவுசெய்து, பாதுகாப்பதற்கென்றே முத்தமிழறிஞர் கலைஞர் அவர்களால் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட இயக்ககம் தோற்றுவிக்கப்பட்டது. இவ்வியக்ககம் வாயிலாக வெளியிடப்பட்ட அகரமுதலிகளுக்கு முத்தமிழறிஞர் வரைந்த பொன்னுரைகளான முன்னுரைகளை எழுத்தெண்ணிப் பயின்றால் தமிழ்மொழியின் செழுமையையும், வளமையையும் கண்டு மகிழலாம்.

16.07.2009ஆம் நாளன்று முத்தமிழறிஞர் கலைஞர் அவர்கள் தீட்டிய பொன்னுரையான இவ்வணிந்துரை பின்வருமாறு:

“மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்களை இயக்குநராகக் கொண்டு 1974 இல் அமைக்கப்பட்ட செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் 12 மடலங்களில், 31 தொகுதிகளாகச் " செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி”

வெளியிடத் திட்டமிட்டது. திட்டமிட்டவாறே, இதுவரை 10 மடலங்களில் 'அ' முதல் 'ஔ' வரை உயிரெழுத்துகளில் 3 தொகுதிகள், 'க' முதல் 'வெள' வரை உயிர்மெய் எழுத்துகளில் 21 தொகுதிகள், தமிழ் அகரமுதலி வரலாறு 1 தொகுதி என மொத்தம் 25 தொகுதிகளை வெளியிட்டுள்ளது.

அவற்றைத் தொடர்ந்து தமிழில் கலந்துள்ள பிறமொழிச் சொற்கள் தொடர்பாக "அயற்சொல் மடலம்" 10வது மடலமாக 3 தொகுதிகள் வெளியிடத் திட்டமிடப்பட்டு, அதில் முதற்கட்டமாக இரண்டு தொகுதிகள் தற்போது வெளியிடப்படுகின்றன. இதனைத் தொடர்ந்து மற்ற இரு தொகுதிகளுடன் 12வது இறுதி மடலமும் மிக விரைவில் வெளியாகி இவ்வரும் பணி நிறைவு பெறவிருக்கிறது. இந்திய மொழிகளில் இதுவரை வெளிவந்துள்ள சொற்பிறப்பியல் அகரமுதலிகளில் இதுவே மிகவும் விரிவானதும், செறிவானதும் ஆகும்.

அனைத்துச் சொற்களுக்கும் எழுத்துப் பெயர்ப்புடன், இலக்கணக் குறிப்பு, தமிழ் மற்றும் ஆங்கிலப் பொருள்கள், காலந்தோறும் மாறிவந்துள்ள பொருள்கள், திராவிட மொழிகளில் சென்றுள்ள ஒலி வடிவங்கள், பழமொழிகள், பல்வேறு சொல் வழக்குகள் ஆகியவற்றுடன் தேவைப்படும் இடங்களில் பட விளக்கங்களும் இப்பேரகரமுதலியில் இடம்பெற்றுள்ளன.

அனைவர்க்கும் பயன்படும் பொதுவகை அகரமுதலியாகவும், மொழியியல் மற்றும் திராவிட மொழிகள் ஆராய்ச்சியாளருக்குப் பெரிதும் பயன்தரும் ஒரு சிறந்த கருவி நூலாகவும் உருவாகியுள்ள இந்தச் “செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி" தொகுதிகளின் துணையோடு தமிழ்மொழியைப் பேணிக்காத்திடத் தமிழார்வலர்கள் முனைந்திடல் வேண்டும்.

இந்த அரும்பெரும் தமிழ்மொழிக் கருவூலத்தை உருவாக்கும் முயற்சிகளில் ஈடுபட்டுத் தமிழ்மொழிக்கு அணிசேர்த்துள்ள அறிஞர் பெருமக்கள், பணியாளர்கள் அனைவருக்கும் என் மனமார்ந்த பாராட்டுகளும் நல்வாழ்த்துகளும் உரித்தாகுக.”

26.05.2010ஆம் நாளன்று முத்தமிழறிஞர் கலைஞர் அவர்கள் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் வெளியீட்டிற்கு வரைந்த வாழ்த்துரை பின்வருமாறு:

“செந்தமிழ் மொழியின் வேர்ச்சொல் வித்தகர் மொழிஞாயிறு ஞா.தேவநேயப் பாவாணர் அவர்களை இயக்குநராகக் கொண்டு, 1974ஆம் ஆண்டில், அன்றைய திராவிட முன்னேற்றக் கழக அரசு காலத்தில் உருவாக்கப்பட்ட செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியை 12 மடலங்களில் 31 தொகுதிகளாகக் கலைக்களஞ்சிய அமைப்பில் விரிவாக உருவாக்கி வெளியிடத் திட்டமிட்டது. அதன்படி, இதுவரை, 11 மடலங்களில் 28 தொகுதிகள் வெளியிடப்பட்டுள்ளன.

இந்த நூல் தொகுதிகளில் விடுபட்ட சொற்கள் தொகுக்கப்பட்டு, ஒன்பதாம் மடலத்தின் இணைப்பாக இரண்டு பாகங்கள் 29, 30 ஆகிய இரு தொகுதிகளாக உருவாக்கப்பட்டுள்ளன. இந்த இரு நூல்களும் கோவை மாநகரில் நடைபெறும் உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டில் வெளியிடப்படுவது மிகுந்த பாராட்டுக்குரியது. இதனைத் தொடர்ந்து, 12வது மடலமாக, அதாவது, 31ஆம் தொகுதியாகச் 'சொற்பிறப்பு நெறிமுறைகள்' என்னும் பெயரில் இறுதித் தொகுதி விரைவில் வெளியிடப்படவுள்ளது.

கழக அரசு அமையும் காலங்களில் மட்டுமே கனிவோடு கவனம் செலுத்தப்பட்டு, கடந்த 36 ஆண்டுகளாக நடைபெற்றுவரும் செந்தமிழ்ச் சொற்பிறப்புப் பேரகரமுதலித் திட்டத்தின் நூல்கள் அனைத்தும் அன்னைத் தமிழின் அரிய அணிகலனாகவும், ஆராய்ச்சியாளர்களுக்கு ஏற்றதோர் கருவூலமாகவும் திகழும் என உறுதியாக நம்புகிறேன். இப்பணியில் ஈடுபட்ட தமிழறிஞர் பெருமக்கள் அனைவரையும் உளமாரப் பாராட்டி வாழ்த்துகிறேன்.”

18.02.2011இல் முத்தமிழறிஞர், எண்ணிலடங்கா வாழ்த்துரைகளுக்கு மத்தியில் அகரமுதலி வெளியீட்டிற்கு வரைந்த நிறைவு அணிந்துரை இதுவேயாகும்.

“மொழிஞாயிறு ஞா.தேவநேயப்பாவாணர் அவர்களை இயக்குநராகக் கொண்டு, செம்மொழியாம் தமிழ் மொழியின் தனித்தன்மையையும், தொன்மையையும், மேன்மையையும் புலப்படுத்தும் நோக்கில் 'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி' ஒன்றை உருவாக்கும் திட்டத்தை, 8.5.1974 அன்று நான் முதல்முறை முதலமைச்சராக விளங்கிய காலத்தில் உருவாக்கினேன்.

தமிழ்மொழி உயர்தனிச் செம்மொழி மட்டுமன்றி, உலகத் தாய்மொழி என்னும் முடிவை உலகு ஒப்பிடுமாறு, பற்பலச் சான்றுகள் தந்து நிறுவிடும் தொண்டினில் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டு, தமது வாழ்நாள் பணியாகச் செய்துவந்த பாவாணரே, இந்த அரிய பணியை நிறைவேற்ற வல்லவர் என்பது நாடறிந்த உண்மை. அவர்கள் பணியிடையில், 15.1.1981 அன்று இயற்கை எய்த நேரிட்டது பேரிழப்பாகும்.

எனினும், அப்பணியைப் பாவாணர் ஆய்வு நெறியில் தோய்ந்து தேர்ந்த முனைவர் இரா.மதிவாணன் பொறுப்பேற்றுத் தொடர்ந்து பணியாற்றி, அகரமுதலியின் மடலங்களை அச்சியற்றி வெளியிட்டு, அதன் இறுதி மடலமாகிய பன்னிரண்டாம் மடலத்தினை, திட்டத்தின் 31வது வெளியீடாகக் கொண்டு வந்துள்ளது காண மகிழ்கின்றேன்.

நமது தமிழ்மொழி 'செம்மொழி' என்பதை மைய அரசு ஏற்று அறிவித்து, உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடும் கோவையில் சிறப்பாக நடைபெற்று, உலகெங்கும் தமிழர்கள் வாழும் நாடுகளில் எல்லாம் ஒருங்குறி (Unicode) பயன்படுத்தக்கூடிய நிலை உருவாகியுள்ள நல்லதொரு சூழலில், தமிழ் ஆர்வலர்களும், ஆய்வாளர்களும், ஆசிரியர்களும், எழுத்தாளர்களும், கலைத் துறையினரும் இடம்பெற்றுள்ள நாடுகளிலெல்லாம், செம்மொழித் தமிழுக்கு ஒருபெரும் வரவேற்பு மலர்ந்து வருவதை நாம் காண்கிறோம்.

இந்நிலையில், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலித் திட்டப் பணி நிறைவெய்தியுள்ளது மிகவும் வரவேற்கப்படுவதாகும். இத்திட்டத்தில் பங்கேற்று, பல நிலைகளில் பணியாற்றித் திட்டம் முழுமைபெறத் துணைபுரிந்துள்ள அனைவருக்கும் எனது பாராட்டுகளை உரித்தாக்குகிறேன்."

கடந்த ஆண்டு 2021 இறுதியில், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் வாயிலாக வெளியிடப்பெற்ற ஆய்வு மலருக்கு முதன் முதலாக மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் வரைந்த வாழ்த்துரை பின்வருமாறு:

"ஒரு மொழியின் தொன்மையைப் போலவே அதன் இளமையும் எளிமையும் பெருமைக்குரிய ஒன்றாகும். அதனடிப்படையில் இனிமை, வளமை, செம்மை, வியன்மை போன்ற சிறப்புகளை ஒருங்கேயுடைய தமிழ்மொழியை என்றும் குன்றாத வண்மொழியாக மிளிரச் செய்வதற்குச் சொல்லாக்கம் மிகவும் இன்றியமையாததாகும்.

" ஆதி அந்தமிலாது இருக்கின்ற இனிய மொழி
ஓதி வளரும் உயிரான உலகமொழி
நம்மொழி நம்மொழி அதுவே
செம்மொழி செம்மொழி நம் தமிழ்மொழியாம் !
வாழிய வாழியவே ! "

என்று முழங்கிய முத்தமிழ் அறிஞர் கலைஞர் அவர்களின் பெருமுயற்சியால், உலகின் மூத்த மொழியாம் நம் தமிழ்மொழி இன்று செம்மொழியாக உயர்ந்து மிளிர்கிறது.

ஆட்சி மொழியாகவும், பயிற்று மொழியாகவும் வளர்ச்சியடைந்துள்ள மொழியை அறிவியல் மொழியாகவும், நாளும் மாறிவரும் புதிய உலகிற்கான வளமொழியாகவும் வன்மை பெறச்செய்வதற்குச் செழுமையான சொற்களஞ்சியம் இருத்தல் வேண்டும்.

பண்டைய காலத்திலிருந்தே, பொருத்தமான சொற்களைத் தமிழர்கள் உருவாக்கினர்.

" பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்
சொல்லினாகும் என்மனார் புலவர் "

(சொல். பெயரியல்: 2)

எனச் சொல்லின் பொருட்தன்மையை ஒல்காப்புகழ் தொல்காப்பியம் வாயிலாக அறிகிறோம்.

உலகில் புதிதாக மலரும் கலைச்சொற்களை ஏற்றுக்கொண்டு நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக ஆங்கிலம் வளர்ந்து வருவதைப் போல, அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சிக்கு ஈடு கொடுக்கும் வகையிலும்,

" சென்றிடுவீர் எட்டுத்திக்கும் கலைச் செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்குச் சேர்ப்பீர்" என்ற தேசியக் கவிஞர் பாரதியாரின் கூற்றுக்கிணங்கவும், கலைச் செல்வங்களைப் போலவே, 'புதிய கலைச்சொற்களையும்' தமிழில் திரட்டிச் சொல் வளத்தைப் பெருக்குவதற்கு உலகத் தமிழர்கள் ஒன்றிணைந்து செயலாற்ற வேண்டும்.

தற்போதைய அகராதியியல் அமைப்பு முறைக்கு அடித்தளமிட்ட வீரமாமுனிவரைப் போற்றும் வகையில், அவரின் பிறந்த நாளான நவம்பர் எட்டாம் நாள் 'தமிழ் அகராதியியல் நாள்' விழாவாக அரசு சார்பாகக் கொண்டாடப்படுகிறது.

"வெளியுலகில் சிந்தனையில் புதிது புதிதாக
விளைந்துள்ள எவற்றினுக்கும்
பெயர்களெலாங் கண்டு
தெளிவுறுத்துப் படங்களொடு
சுவடியெலாம் செய்து
செந்தமிழைச் செழுந்தமிழாய்ச்
செய்வதுவும் வேண்டும்"

என்ற புரட்சிக்கவிஞரின் விழைவிற்கிணங்க, அகராதியியலாளர், தமிழறிஞர்கள், ஆய்வாளர்கள், ஊடக நண்பர்கள், மாணவச் செல்வங்கள் கலைச்சொல்லாக்கத்தில் ஈடுபட்டு "சொற்குவை" (www.sorkuvai.com) வலைத்தளத்தில் அனைத்துத் துறைகளின் கலைச்சொற்கள் இடம்பெற வகை செய்ய வேண்டும்.

அறிஞர் பெருமக்களின் செறிவார்ந்த கட்டுரைகளைக் கொண்ட அகராதி ஆய்வு மலர் 2021, தமிழுலகில் என்றென்றும் மணம் பரப்ப என் வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழ் வளர்ச்சியைச் சிறப்பாக வழிநடத்தும் மாண்புமிகு தொழில்கள், தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு மற்றும் தொல்லியல் துறை அமைச்சர் திரு. தங்கம் தென்னரசு அவர்களுக்கும், தமிழ்வளர்ச்சித் துறையின் அனைத்துச் செயற்பாடுகளுக்கும், உறுதுணையாகத் திகழும், தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறை அரசுச் செயலாளர் திரு.மகேசன் காசிராஜன் அவர்களுக்கும் என் பாராட்டுகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்."

நன்றி : தினசெய்தி

# மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணரின் சொல்லாராய்ச்சியில் மேல்நாட்டுக்கோட்பாடுகள்

பாவாணர் பற்றாளர். அவர்தம் ஏகலைவ மாணவன் அறிவுமகிழ்நன் (சச்சிதானந்தன்)
இயக்குநர், பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவனம், பிரான்சு




**அப்பா பெயர்: ஞானமுத்து. அம்மா பெயர் : பரிபூரணம்**
**மொழிஞாயிறு உதித்த நாள் :07.02.1902. மறைந்த நாள்:15.01.1981.**

**தேவநேயப் பாவாணர் மேலைமொழியியற் கல்வியாளர்களுக்கு விடுத்த அறைகூவல் !**

" I make an earnest appeal to the literature at large particularly to the Western scholars, to turn their attention to Tamil forthwith and dive deep therein to bring out prodigious truths more precious than the Valamburi pearls obtainable from the Pandyan seas... "

**"நான் கற்றறிந்தவர்கள் யாவருக்கும், குறிப்பாக, மேலைக்கல்வியாளர்களுக்கு ஒரு வேண்டுகோள் விடுக்கின்றேன். அவர்கள் தமிழ்ப்பால் தம் கருத்தைச் செலுத்துவார்களாக ! பாண்டிநாட்டுக் கடல்களில் கிடைத்த வலம்புரி முத்துகளினும், விலையுயர்ந்த, கிடைத்தற்கரிய உண்மைகளை அவர்கள் தமிழ்க்கடலில் மூழ்கிப் பெற்றுத்தருவார்களாக !**
**உலகின் முதல் செம்மொழி பாவாணர்(1966)**

தமிழையே எண்ணி, தமிழுக்காகவே உழைத்து, தமிழ் வளம் பெறுவதற்காகவே வாழ்ந்த தமிழின் உருவம் பாவாணர். தேவநேயப் பாவாணர் போல் நீண்ட ஆயுளில், தமிழ்ப்பணி புரிந்தவர் எவருமிலர் என்பதைத் தமிழறிந்த யாவருமே அறிவர்! ஞானமும் பூரணமும் பெற்றெடுத்த நான்காவது மகனாகவும் பத்தாவது மகவாகவும் பிறந்தவர் தேவநேசன். தமிழாசிரியர் மாசிலாமணியார், தேவநேசனின் கவித்திறமையை அறிந்து, அவருக்குத் தேவநேசக் கவிவாணன் எனச் சிறப்புப்பெயர் கொடுத்தார். கவிவாணன் என்பதைத் தமிழாக்கம் செய்து, பாவாணர் எனத் தானே தன்னை அழைத்துக் கொண்டார். ('நேசம்' என்பது நேயம் என்பதன் திரிபு என்பதனை 'என் பெயர் என் சொல்' என்ற கட்டுரையில் தெளிவுபடுத்தினார்.) இதனையே பின்னாளில் தமிழர்கள் பாவாணர் என அழைத்துக் கொள்ளலாயினர். பாவலரேறு பெருஞ்சித்திரனார் தனது ஆசிரியருக்குத் தென்மொழி வாயிலாக "மொழிஞாயிறு" என்ற நிலையான பட்டத்தை வழங்கினார்.



பாவாணர், தமிழ்ச்சொற்களை அணுஅணுவாக ஆய்ந்து, அவற்றின் வேரையும் விதையையும் கண்டறிந்த தனித்தமிழ்க்காவலர். சமற்கிருதம், தெலுங்கு, மலையாளம், கன்னடம், ஆங்கிலம், பிரெஞ்சு, கிரேக்கம், இலத்தீன், ஹீப்ரு முதலாக, பதினெட்டிற்கும் மேற்பட்ட மொழிகளின் சொல்லியல்புகளைக் கற்றறிந்து, தமிழுடன் ஒப்பீடு செய்து பன்னிரண்டு வகையாக நாற்பத்தி மூன்று நூல்களைத் தந்த பன்மொழி வித்தகர்!

சொல்லாராய்ச்சித் துறையில் மிக்கார் இல்லா ஒப்பற்ற தனித்திறமை உடைய அறிஞர்! சொல்லாராய்ச்சி வல்லுநர்! மறைமலை அடிகளார் வழியில் நின்று, தனித்தமிழ் இயக்கத்திற்கு அடிமரமாய், ஆழ்வேராய் இருந்து உழைத்துத் திகழ்ந்தவர் பாவாணர்! அவரின் பெரிய வீரமீசையைப் பார்த்து, ஆணித்தரமான ஆராய்ச்சி முடிவுகளை உள்வாங்கிக் கொள்ளும் கடினமானவராகத் தோற்றமளிப்பார் தனித்தமிழ்க்காவலர் ! ஆனால் அவரின் கருத்தாழம் மிகு சொற்களையும், எளிய தமிழில் தெளிவான குரலில் செவ்வியில் பேசும்போது மென்மையானவராகவும் அன்பானராகவும் தேவனை நேசிப்பவராகவும் தெரிவார்!

## தமிழ் மொழி, இயன்மொழி என்பதற்குப் பாவாணர் காட்டும் 16 பண்புகள்

தொன்மை இயன்மை தூய்மை தாய்மை
முன்மை வியன்மை வளமை மறைமை
எண்மை இளமை இனிமை தனிமை
ஒண்மை இறைமை அம்மை செம்மை
எனும்பதி னாறும் இன்றமிழ் இயல்பெனப்
பன்னுவர் மொழிவலர் பாவாணர் தாமே.

தமிழின் தொன்மை, தனித்தன்மை ஆகியவற்றைப் பற்றி பாவாணர் தனது தமிழ், ஆங்கில நூல்களிலும் கட்டுரைகளிலும் கூறியுள்ள கருத்துகள் அவர்காலத்தில் வாழ்ந்த சில புறப்பகைவர்களாலும், உட்பகைவர்களாலும் எள்ளி நகையாடப்பட்டு வந்துள்ளதைக் கண்கூடாகவே அறிவர் பாவாணர்வழி நிற்போர். பாவாணருடைய கோட்பாடுகள் அறிவியல்சார் மொழிநூல் அடிப்படையில் அமைந்தவை என்பது மொழியியல், சொற்பிறப்பராய்ச்சிமுறைகள் அறிந்தவர்களுக்குத் தெரியும்.






1887 1874

சாம்பேர் Chamber இன் Chamber's Etymological Dictionary of the English Language ஆங்கில மொழியின் சொற்பிறப்பியல் அகராதி, வால்டர். டபிள்யூ.ஸ்கீற் Walter w.skeat எழுதிய, Principles of English Etymology ஆங்கிலச் சொற்பிறப்பியல் கோட்பாடுகள்,, An Etymological Dictionary of the English Language ஆங்கிலமொழியின் சொற்பிறப்பியல் அகராதி (1909)களில் காணப்பெறும் ஆங்கிலச்சொல்லியல், சொற்பிறப்பியல் நெறிமுறைகளையும் ஒப்பிட்டு ஆய்ந்து தமிழ்ச்சொற்பிறப்பியல் கோட்பாடுகளையும் பாவாணர் தனது நூல்களில் குறிப்பாக, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி வழியாகவும் தமிழுக்குத் தந்தார்.

தமிழில் சொற்பிறப்பியல் நூல்களை முதலில் நல்லூர் வண.சுவாமி ஞானப்பிரகாசர் 1932இல் தமிழ்ச்சொற்பிறப்பாராய்ச்சி Studies in Tamil Etymology, சொற்பிறப்பு ஒப்பியல்-An Etymological and Comparative LEXICON of the Tamil Language ஆகியவற்றை வெளியிட்டார். இவற்றை உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் வெளியிட்டிருந்தது.




## சொற்பிறப்பியல் (Etymology)

ஆங்கிலம்வழி கிரேக்க, இலத்தீன் சொற்பிறப்பியலை ஆராய்ந்து தமிழுக்குத் தந்த சொற்பிறப்பியல் முறைகள். இவற்றினை விளக்கமாகச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி, மொழியாராய்ச்சிக் கட்டுரைகள் முதலான நூல்களிலும் அறிந்துகொள்ளமுடியும்.

1. ஒலிவொப்புமைச் சொற்பிறப்பு (Sound Etymology) : Parlement - பாராளுமன்று
2. உன்னிப்புச் சொற்பிறப்பு (Guessing Etymology) : அணில் - அழகு, வரி
3. குறிக்கோட் சொற்பிறப்பு (Tendentious Etymology) : ஐயன் - ஆர்ய
4. அடிப்படைச் சொற்பிறப்பு (Popular Etymology) : நூல் - நூற்கப்படுவது
5. நகையாட்டுச் சொற்பிறப்பு (Playful Etymology) : தோசை - தோ - இரண்டு+சொய்ங்
6. அறிவாகுலச் சொற்பிறப்பு (Pedantic Etymology) : மண் - மணப்பது
7. வழூஉப் பகுப்புச்சொற்பிறப்பு (Malanalytical Etymology) : சாப்பாடு - சாதற்கேதுவானது
8. பொருந்தப் புகல்வுச் சொற்பிறப்பு (Plausible Etymology) : ஒப்பாரி - ஒப்ப ஆரித்தல்
9. வேர்மூலச்சொற்பிறப்பு ( Root tracing Etymology) : புல்- புள்- புழல்- புடல்-புடலை -புடலங்காய்
10. வரிவமீட்டமைப்புச் சொற்பிறப்பு (Reconstructed Etymology) : அங்காடி- அம்மு - (விற்றல்)+கடை - அம்முகடை அங்கடை - அங்கடி - அங்காடி

தமிழ் என்பதைத் தன் மூச்சாகக் கொண்டு உழைத்த பாவாணர் அவர்கள் தமிழ்மொழிச் சொற்கள் தொடர்பாய் ஐரோப்பிய மொழிகளுடன் ஒப்பாய்வு செய்து எழுத்தெண்ணி வரைந்த மொழியாராய்ச்சிக் கட்டுரைகள் கீழே உள்ளன.

1. மொழியாராய்ச்சி
2. உலக மொழிகளின் தொடர்பு
3. முதற்றாய் மொழியின் இயல்புகள்
4. வாய்ச் செய்கை யொலிச் சொற்கள்
5. சொற்குலமும் குடும்பமும்
6. சொற்பொருளாராய்ச்சி
7. சொல்வேர்காண் வழிகள்
8. ககர சகரப் பரிமாற்றம்
9. மொழியாராய்ச்சியும் மொழியகழ்வராய்ச்சியும் ஒன்றே
10. மேலை மொழிநூலாரின் மேலோட்டக் கொள்கைகள்
11. சேயும் சேய்மையும்
12. ஆலமரப் பெயர்மூலம்
13. கருப்பும் கறுப்பும்
14. தெளிதேனும் களிமதுவும்

15. கலைச்சொல்லாக்க நெறிமுறைகள்

பாவாணரின் மொழியியல் ஆய்வு தான்தோன்றித்தனமானது என்றும், குருட்டுப்போக்கானது என்றும், எத்தகைய வரம்புகளுக்கும் கட்டுப்படாது, அவரது விருப்புவெறுப்பினை அடிப்படையாகக் கொண்டு இயங்குவது என்றும் குற்றம் சாட்டுவார், அவருடைய அறிவாற்றலுக்கும் உழைப்புக்கும் மதிப்புச் செய்தவராகார் என்று கூறுகிறார், தேவநேயப் பாவாணர் சொல்லாய்வும் சொல்லாடலும் எனும் நூலில் பேரறிஞர் ப.மருதநாயகம் அவர்கள். பாவாணரின் சொல்லாய்வு, தனியாய்வுகளையும் அன்றைய பாவாணர் கருத்துகளை இன்றைய மேனாட்டார் ஏற்றுவருவது தொடர்பான ஒப்பாய்வுக் கருத்துகளையும் தம் ஆய்வுக் குறிப்புகளையும் அந்நூலில் வழங்கியுள்ளார் பேரறிஞர் மருதநாயகம்.

தனித்தமிழை உரத்துப் பேசியும், எழுதியும் செய்து, சமற்கிருதம் மற்றும் வடமொழிகளை நீக்கி, வேர்சொல் எடுத்துக்காட்டுகளுடன் தமிழ்ச்சொற்களை உயர்த்திக்காட்டிய தமிழ்ப்பணியானது, உட்பகைவர்களையும் வெளிப்பகைவர்களையும்




ஏற்படுத்திக் கொண்டதோடு, பாவாணருக்குச் வெவ்வேறு வழிகளில் கெடுதிகளையும் கேடுகளையும் வரவாக்கிக்கொண்டது!

மேலைநாட்டு மொழியியல் அறிஞர்களான George Hart-ஜோர்ஜ் கார்ட், Kamil Zwelabil கமில் சுவெலபில், Stephen Hillyer Lewitt ஸ்டீவென் கில்லியெர் லெவிற் போன்றவர்கள் தேவநேயருடன் தமிழ்மொழி சார்ந்து உடன்படும் கொள்கைகளை உடையவர்களாக இயங்கியிருக்கின்றனர் என்பது பெருமைக்கு உரியது.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வீரமாமுனிவர் விருதினைப் பெற்ற முதலாமவரான Gregory James எனும் ஐரோப்பிய அகராதியிலாளர் (2000) தொகுத்த தமிழ் அகராதிகளின் வரலாறு A History of Tamil Dictionaries எனும் பெருநூலில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியின் சில பக்கங்களைப் படவடிவில் காட்டி தனித்தமிழில் வந்த தேவநேயப் பாவாணரின் அகராதி என்று குறிப்பிட்டுள்ளார். அகராதி தொடர்பாகக் கொடுக்கப்பட்ட அத்தனை விளங்கங்களையும் தந்தது வரலாற்றுப் பதிவு உடையது.

செந்தமிழ்ச்செல்வர் வாழ்ந்த காலச்சூழலில், பொருளாதாரவளம் குறைந்த நிலையில் ஐரோப்பியமொழிகளில் வந்த மொழியியல், அகராதியியல் கொள்கைகளை, கோட்பாடுகளைக் கற்றறிந்த ஆற்றலைப் பெற்றநிலையைக் கீழ்க்காணும் ஒளிப்படத்தினைப் பின்னோக்கிப்பார்த்தால், அவர் எத்தனை துன்பப்பட்டிருப்பார், உடல்நிலை குன்றியிருந்திருப்பார் என்பதை உய்த்துணரலாம். ஆனாலும் அவர், மேற்கொண்ட செயலில் மனந்தளராமல் துணிந்து செயலாற்றி வெற்றி பெற்றார் என்பதை எண்ணிப்பார்க்க வேண்டும்.

யார் எவர் தனது தாய்மொழியினை நேசிக்கிறாரோ, அவர் மொழிப்பற்றாளராக, மொழியை வளர்த்தவர்களாக ஏற்றுக்கொள்ளப்படுவர், கருதப்படுவர். இது உலகில் உள்ள அனைத்து மொழிகளுக்கும், குறிப்பாக அக்காடியன், சீனம், அராபியம், பிரெஞ்சு, ஆங்கிலம் ஆகிய மொழிகளிலும் மொழிப்பற்றுப் போராட்டங்கள், எழுச்சிகள் வரலாற்றில் இடம் பெற்றிருக்கின்றன. இவ்வகையில்தான் தமிழின் தனித்தன்மையை வளர்த்தார்; போற்றினார்; போராடினார் எழுசுடர் ஞாயிறு !

ஆய்ந்து சொன்னார் தமிழ்மொழிதான் ஆதிமொழி என்று
ஆர்ந்தெழுந்தார் அவனியிலே தமிழ்வளர நின்று

தேய்வில்லாத நிலவெனவே நிலவுகின்றார் மனதில்

தேன்தமிழை உயிர்மூச்சாய் சுவாசித்தார் நினைவில்

ஓய்வில்லா உழைப்பாலே உயர்த்திவிட்டார் தமிழை

ஓர்மொழியும் இணையில்லை இசையவைத்தார் உலகை

காய்ந்திருந்த தமிழ்செழிக்க அர்ப்பணித்தார் தன்னை

காலமெல்லாம் கடுமுழைப்பால் தமிழ்காத்தார் உண்மை.

.......பாவலர் பாசுக்கரன்

# TAMILS IN ANCIENT SRI LANKA SOME EPIGRAPHIC EVIDENCE

A. THEVARAJAN Melai Puloly, Point-Pedro, Sri Lanka.

## Introduction

The Tamils have played an important role in the shaping of political, economic, social and cultural history of Sri Lanka. Even in the earliest records, the Brahmi cave inscriptions, there are references to their activities in Sri Lanka. It is thus evident, that the Tamils are associated with every phase of development in every sphere, from the earliest times known to history.

## Ethnic Reference

The earliest inscriptions belonging to the pre-Christian era make ethnic reference to the Tamils. The term used in these inscriptions is Dameda (which corresponds to Damela) meaning Tamils. There are four such inscriptions of the pre-Christian era which make ethnic reference to the Tamils.1

## Tissa and Uttiya

The first King known to recorded history is Devanampiya Tissa and his brother is known as Uttiya. Tissa is a Tamil name as borne out by inscriptional evidence. Uttiya or Utiya refers to a clan of Chera dynasty. Devanampiya is a title or adoration fashioned by the Maurya Kings as devout followers of the Buddhist faith which the Kings of Sri Lanka too embraced. It is, therefore, not unreasonable to infer that Devanampiya Tissa, the first convert to Buddhism, could have been of Chera extraction.

## Varunadatta and Ramadatta

Varunadatta is the sister of the wife of Devanampiya Tissa, Ramadatta. Female names ending in Datta are well known to Tamil literary tradition. The heroine Kantharuvadatta in the famous epic Civaka Cintamani, Vasavadatta wife of Udayanan, Datta daughter of Jampan and wife of Hiranya kasipan are well known and worthy of note. Datta in Tamil means "a parrot", and a female name ending with Datta suits very well with the Tamil tradition. The name Ramadatta reminds one of the Ramayana cult that was prevalent in Sri Lanka. In all reasonable inference, these two names are Tamil in character.

Siva Names and Brahmins

There are about sixty inscriptions of the pre-Christian era which begin with the name Siva or end with the name Siva. This is suggestive of the prevalence of the Siva cult - i.e. Saivaism. Saivaism was the predominant religion of South India at that time. There are about twentyone inscriptions of this period which refer to Brahmin participation in Buddhist activities or donation of caves for the Buddhist ascetics. Since Saivaism was predominant in South India at that time, the same religion must have been practised in Sri Lanka by a fair proportion of the Tamil inhabitants of Sri Lanka at that time and that accounts for the prevalence of Siva names and Brahmin influence.2 Two of the most ancient inscriptions from Piccandiyawa refer to a Brahmin, Gobiti, as teacher and physician of King Devanampiya Tissa.3

## Kapilan

The name Kapilan occurs in some inscriptions of this period. Kapilan is the name of a famous Sangam poet whose treatment of nature in poetry is hailed as unique. His poems are found in a number of Sangam classics. This name also could be a Tamil name.

## Nagas

There are a number of inscriptions which refer to Nagas. Nearly fifteen of the Nagas are referred to as Paramukas. Nagas are people who occupied the Indian sub-continent when the Aryans arrived and are considered to be Dravidians.4 There is no surprise that these Nagas occupied Sri Lanka too. This accounts for the reference to the Nagas in these inscriptions.

## Velas

There are a number of inscriptions with the name Velu. This name is suggestive of the Murugan (Skanda) cult. Velan is another name for Murugan and means the possessor of the spearheaded Vel. This name is very common among the Tamils today. Murugan is one of the earliest gods worshipped by the Tamils. Velan is a popular god of the Tamils and the Tamil literary tradition from the Sangam period establishes this beyond all doubt. In fact Murugan or Velan is considered superior to Lord Siva5 although in later Saiva Siddhanta tradition the two were considered to be just different manifestations of the same Being. Thus it is clear that the name Velu is purely Tamil, One of the highest Offices held by a Velu is that of the Kutaragaya whose functions were of a ceremonial nature. He had to "hold the golden Vase and sprinkle the Sacred Bodhi Tree at Anuradhapura with water made holy by the chanting of paritta on the occasion of the Mahabodhi festival."6 This Office was conferred on Suriyagutta, a kinsman of Asoka, by Devampiya Tissa. Paranavitane says that the local recipient of this Office should have been of royal descent and suggests that Velu referred to could have been a descendent of Suriyagutta. His view is based on Mahabodhivansa although he is uncertain about its authenticity. It has to be remembered that there is no North Indian name Velu and no one in the Mauryan dynasty. It may be that Devanampiya Tissa made one of his kins (bearing

